## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்விட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே.
34

## சுந்தரர்

### அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

செல்வநல் லொற்றி யூரன்
செய்யசங் கிலியா லார்த்து
மல்லலம் பரவை தன்கண்
மாழ்குற வமிழ்த்து மேனு
மல்லுநன் பகலு நீங்கா
தவன்மகி ழுடியி லெய்தி
நல்லவின் படைந்தி ருப்ப
னம்பியா ரூரன் றானே. 35

## மாணிக்கவாசகர்

### நேரிசையாசிரியப்பா

தானே முத்தி தருகுவன் சிவனவ
னடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தாற் கட்டவல் லார்க்கே. 36

## திருஞான சம்பந்தர்

### நேரிசை வெண்பா

வல்லார் பிறப்பறுப்பர் வண்மை நலங்கல்வி
நல்லா தரவின்ப ஞானங்க—ளெல்லாந்
திருஞான சம்பந்தன் சேவடியே யென்னு
மொருஞான சம்பந்த முற்று. 37

## திருநாவுக்கரசர்

### கட்டளைக்கலித்துறை

உற்றா னலன்றவந் தீயினின் றானல னூண்புனலா
வற்றா னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்றா னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்ற னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே.
38

### சுந்தரர்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பெருமிழலைக் குறும்பரெனும் பரம யோகி
    பெரிதுவந்துன் திருவடித்தா மரையைப் போற்றி
விரைமலர்தூய் வந்தனைசெய் கின்றா னென்றால்
    விளங்கிழையா ரிருவரொடு முயங்க லாமோ
உரைமதிநின் றனைவெறுப்ப தென்கொ னின்னை
    யுடையானுக் கடுத்தசெய லுனக்கு மாயிற்
சுரர்முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
    தொகைசெய்தோ யறமுதனால் வகைசெய் தோயே
39

### மாணிக்கவாசகர்

நேரிசையாசிரியப்பா

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே 40